யிற்று. ஒரு ஆசிரியன் சாத்திரப் பொருளைப் போதிக்கின்ற முதிர்ந்த வார்த்தையானது மானதப்பிரத்தியட்சத்திற் றோற்றும் முதிர்ந்த புத்திபூர்வமாய் வருதல் கண்டு,- "இவன்முதிர்ந்த புத்திமான்-சாத்திரப்பொருள் போதிக்கும் முதிர்ந்த வார்த்தையைவசனித்தலால்" என்று (வார்த்தை புத்திபூர்வமாய் வருமென்றனுமித்து-வார்த்தையினுயர்ச்சியாற் புத்தியினுயர்ச்சியை அனுமிப்பது) "ஒதுமுறையாலறிவினளவுணர்தல்" அனுமானானுமானமாம்;— வார்த்தையாகிய ஏதுக்கொண்டு மறைபொருளாகிய புத்தியை அனுமித்து, வார்த்தைமுதிர்ச்சியாகிய ஏதுக்கொண்டு மறைபொருளாகிய புத்தி உயர்ச்சியை அனுமித்தலின், அனுமானானுமானமாயிற்று. "பேறிழவின்பமோடுபிணிமூப்புச்சாக்காடென்னும்--ஆறுமுன்கருவுட்பட்டதவ்விதியனுபவத்தால்--ஏறிடு முன்பு செய்த கன்மமிங்கிதனுக்கேது--தேறுநீயினிச் செய்கன்மமேலுடற்சேருமென்றே." என்பது ஆகமவாக்காதலின்;--இம்மையிலே நிகழ்கின்ற சுகதுக்கபோகங்கள் முறைமையிலே முந்திய சென்மங்களிற்செய்த ஆகாமியங்களிற்றிரண்ட சஞ்சிதத்திற் போசிப்பான பிராரத்வபலமாம்; ஆனபடியால்,-இம்மையிலே இயற்றும் ஆகாமியகன்மங் காரணமாய் மறுமையிலே சுகதுக்கபோகங்கள் வந்துபொருந்தும்; என்றனுமிப்பது ஆகமானுமானமென்பர்.

*ஆகமம் இன்னதென்றும் அதன் பகுப்பிலக்கணமிவ்வாறென்றும் உணர்த்துகின்றார்.*

கசு. அநாதியேயமலனுயவறிவனூலாகமந்தான்
மனைமாறின்றிப்பேணறந்திரமந்திரந்தான்
மனதிகளடக்கித்தெய்வம்வழிபடும்வாய்மையாகுந
நாசமிறிலாதான்றன்மையுணர்த்துவதுபதேசந்தான்.

இச்-யம். ஆகமம் என்பது அநாதிமூலமுத்தனாகிய சருவஞ்ஞனது சாத்திரமாம்; அவ்வாகமம், தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை எனமூன்றாம்; அவற்றுள், தந்திரகலையாவது சரிதாகிரியாபாதப்பகுப்பாதலால், பின்னேடுமுன்மலைவின்றிச் சரிதாகிரியாகிருத்தியம்போதிப்பதாம். மந்திரகலையாவது, யோகபாதப்பகுப்பாதலால், சித்தேந்திரியங்களை அடக்கிக் கடவுளைச்சேபதியானாதிகளால் வழிபடும்முறையைப்போதிப்பதாம். உபதேசகலையாவது உற்பத்திநாசமின்றிச் சுயம்பரமாயிருக்கின்ற கடவுளின் இலட்சணத்தைப்போதிப்பதாம்.

கரு. ஈண்டுபக்கப்போலிநான்கேதுப்போலியேமூன்று
பான்
வேண்டுமேழுமூன்றுகவிளங்குவமைப்போலி யீரோன்
காண்டுந்தோல்வித்தானமிரண்டிருபத்திரண்டாங்கருதி
லிவை
கும்.
ஆண்டுமொழிவரிவையெல்லாமளக்கிலறுபத்தைந்தா

இச்-யம். அனுமானப்பிரயோகஞ் செய்யுமிடத்து பட்சாபாசம்நான்குவரும்; ஏதுவாபாசம்மூன்றுயும் இம்மூன்றே இருபத்தோன்றுயும்வரும்; திருட்டாந்தாபாசம் பதினெட்டுவரும். நிக்கிரகத்தானம் இரண்டாயும் இந்த இரண்டே இருபத்திரண்டாயும் வரும்; இவ்வாபாசங்களின் தொகை அறுபத்தைந்து.

முற்றிற்று.